



# கதம்பம்

தில்லை·வில்லாளன்

# கதம்பம்

தில்லை-வில்லாளன்






எரிமலைப் பதிப்பகம்
துறையூர், : திருச்சி மாவட்டம்.

# படிப்பவர்களுக்கு...




ஐந்து சிறு கதைகளின் தொகுப்பு இச்சிறுநூல்— **கதம்பம்!**

**'தழுவும் துருவங்கள்'** ஒரு தத்துவ விளக்கம். **'சீதையை மணந்த இராவணன்'** சிரிப்போடு சிந்தனையைக் கிளறும் ஒரு நகைச் சுவை சித்திரம். **'செல்லாயி'** மனித உடலுடன் உலவும் சில விலங்குகளுக்குப் படைக்கப்படும் அன்புப் படையல். **'வெள்ளிப் பணம்'** பணம் படைத்தவரின் பாதகச்செயலைக் குத்திக்காட்டும் நிகழ்ச்சி. **'கருங்குழி பார்சல்'** சமுதாய ஊழலின் படப்பிடிப்பு.

உங்களுக்கு அன்புக் காணிக்கையாக வைக்கிறேன். மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்ளுங்கள்.

'தென் துருவம்'
சிதம்பரம்.

**தில்லை-வில்லாளன்**

# தழுவும் துருவங்கள்

அப்துல்லா, அனந்தராமன்...

என்று ஆசிரியர் கூப்பிட்டார். எல்லோரும் 'ஹியர் ஸார்' போட்டனர். 'ரிஜிஸ்டர்' கூப்பிட்டு முடிந்தவுடன் பாடத்தை தொடங்கினர். அது விஞ்ஞான வகுப்பறை! ஆசிரியர் சங்கரையா மிகவும் கெட்டிக்காரர். கல்லூரியிலே நல்ல மதிப்பு—குறிப்பாக மாணவரிடையே பேராதரவு! காரணம், அவர் பழகுகிற முறைதான்.

'மாணவர்களே, இன்று நாம் படிக்க இருப்பது மின்கவர்ச்சி முறைபற்றியாகும். ஆகவே சற்று கவன மாகக் கேளுங்கள்.'

அதற்குள் பாலன் எழுந்தான். 'ஸார், நேற்று 'நோட்ஸ்' பாதியிலே கொடுத்து நிறுத்திவிட்டீர்கள். அதை முடித்து விடுங்கள்' என்ருன்.

'சரி, எதுவரைக்கும் கொடுத்திருக்கிறேன். கடைசி வரியைப்படி?'

கந்தசாமி எழுந்தான். தன் வெங்கலத்தொண்டை யொலிக்கப் படித்தான். எல்லா மாணவர்களும் தங்கள் குறிப்பேட்டைப் புரட்டினர். சிலர் பேனவைத் திறந்து தயாராகிக்கொண்டனர்.

'Like poles repel and
Unlike poles attract.'

• •

முதல்நாள் கொடுத்திருந்த குறிப்பில் கடைசி வரி அது. அதாவது ஒரே துருவங்கள் எதிர்க்கின்றன, எதிரிடைத் துருவங்கள் தழுவுகின்றன என்பது கருத்து.

ஆசிரியர் சங்கரய்யா இரண்டு காந்தத் துண்டுகளை எடுத்தார். ஒவ்வொரு துண்டிலும் வட துருவம், தென் துருவம் என்று வர்ணச் சுண்ணக்கட்டியால் குறிப்பிட்டார். வடக்கும் வடக்கும் விரட்டின, தெற்கும் தெற்கும் சேர மறுத்தன. ஆனால் தெற்கும், வடக்கும் ஒன்றை யொன்று ஆவலோடு இழுத்தன!

டணார்........

'நாம், அடுத்த நாள் இதுபற்றி விளக்கம் உரைப் போம்.' ஆசிரியர் வெளியேறினர். வழக்கம்போல் 'சந்தை இரைச்சல் கிளம்பிவிட்டது.

●

முதலெழுத்து 'அ' வில் தொடங்குவதால் கல்லூரியில் அப்துல்லாவையும், அனந்தராமனையும் அடுத்தடுத்து இருக் கும்படி செய்துவிட்டனர். எழுத்திலே இந்த ஒற்றுமை ஆனல் எண்ணத்திலோ—? இருவருக்கும் இடையே ஆயிரமாயிரம் மைல்கள்—இடையிடையே எவ்வளவோ மடுவுகள், மலைகள், காடுகள், பாலை நிலங்கள்—ஒன்றுசேர முடியாத நிலை!

கல்லூரியில் அழகான ஆங்கிலத்திலும் இனிமையான தமிழிலும் பேசும் ஆற்றல் படைத்தவர் இருவர்— அப்துல்லாவும் அனந்தராமனும் அப்புகழ் பெற்றவர். அப்துல்லாவின் ஆங்கிலப்பேச்சு, தமிழ் பேச்சுக்கு

10 டிகிரி குறைவு. அனந்தராமன் ஆங்கிலம் சற்று மதிப்பு வாய்ந்தது. தமிழ்ப் பேச்சு அவ்வளவு கவர்ச்சி கொண்டதாக இல்லை.

அப்துல்லா—?

அப்துல்லாவின் கருத்தோ காலத்தைவிட கடுவேகத்தில் செல்வது. காலத்தோடு ஓடுவது எளிது, காலத்தை மாற்றியமைப்பது கடினம், காலத்தோடு போட்டியிடுவது துன்பம், ஆனால் இவைகளுக்கு மேலாக காலத்திற்கு வழி காட்டுவது என்றால் சாதாரன மாணவர்களால் முடிவதில்லை. அப்துல்லாவின் எண்ணங்கள் அப்படிப்பட்டவை. சுருங்கச் சொன்னால் அவன் ஒரு பகுத்தறிவு வாதி !

அனந்தராமனோ—?

சரியான பழைமை விரும்பி. அதுமட்டுமல்ல, பிற்போக்கு சக்திகளுக்கு பெருத்த ஆதரவு தரும் இயல்புடையவன் தானாக சிந்திப்பதில்லை. யாரோ வாந்தி யெடுப்பதை அள்ளி விழுங்குவது. அதைக் கொட்டுவது பிறகு! இப்படித்தான் அவன் போக்கு.

கல்லூரிப் பேச்சு மேடைகளில் இருவரும் தோன்றுவர். அவர்கள் தோன்றாத மேடை சோபிப்பதில்லை. ஆனால் வெவ்வேறு மூலைகளில்தான் இருவரும்! ஒருவன் ஒன்று வேண்டுமென்றால், மற்றவன் வேண்டவே வேண்டாம் என்று பேசுவான். இது அவர்களுக்கு அமைந்து போன பழக்கம்—பழக்கம் என்ன, மனம் அப்படி மாறிக் கிடக்கிறது, அவர்கள் என்ன செய்வார்கள், பாவம்!

இது மட்டுமா ?—

அப்துல்லா மதத்தால் முகம்மதியன். ஆனல் மதம் மக்கள் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை என்று மன தார நம்புகின்றவன். மத ஊழல்களை ஒழிக்க ஒரு அப்துல்லா உயிர்போதாது என்று நிச்சயமாக நம்புபவன். மக்கள் மனதிலே மண்டிக்கிடக்கிற மூட நம்பிக்கைகளை முறியடிக்க கச்சைக்கட்டியவன். சமுதாயத்திலே படிந் துள்ள அர்த்தமற்ற பழக்கவழக்கங்களை அடியோடு ஒழிக்க வேண்டும் என்று 'கங்கணங்' கட்டியுள்ளவன். ஒரு இனம் வாழ, பிறிதொரு இனம் தாழ வழி வகுத்த எந்த 'மகா புருஷர்களை'யும் இலகுவில்விட மனமில்லாதவன். ஏமாந்த நேரத்தில் ஏற்றங்கொண்ட 'திருடர்களை' பிடித் துத்தர ஒவ்வொரு வாலிபனும் தயாராகவேண்டும் என்பது அவன் குறிக்கோள். இப்படி முயன்ருல் ஒரு பத்தாண்டு களில் வெற்றி கிட்டும் என்பது அவனது அசைக்கமுடி யாத நம்பிக்கை. ஆம், அதற்காக, படிப்பையும் ஒரு படி தள்ளிவைத்துவிட்டு, தொண்டுத் தீயில் குதிக்கவும் தயா ராஞன்.

அனந்தன் அதற்கு நேர்மாறு; அப்துல்லாவின் கொள்கைகளில் ஒவ்வொரு அணுவிலும் குற்றம் இருப்ப தாக எண்ணுகிறவன். அனந்தராமன் அந்த 'வாடாத மேனி'யரின் பரம்பரையைச் சேர்ந்தவன்.

ஆனல் அனந்தராமனும், அப்துல்லாவும் ஒரே கல்லூரி யில் ஒரே வகுப்பில் படிக்கின்ற மாணவர்கள்.

இருவரும் ஆண்கள்—வட துருவங்கள்! அவைதான் விரட்டுமே, அதைத்தான் அவர்கள் செய்தார்கள்.

ஒரு நாள் கல்லூரி மேடையில் அப்துல்லா கனலைக் கக்கினான். அப்துல்லாவின் கனலை அவிக்க அனந்தராமன் புனலைப் பெருக்கினான் ஆனாலும் கொதிப்புப் பேச்சில் ஒவ்வொரு எழுத்தும் ஈட்டியை சொருகுவது போலிருந்தது. எப்பொழுதுமே புரட்சி வீரர்களுக்கு ஆதரவு குறைவு தானே! ஆகவே அப்துல்லாவை எதிர்த்தார்கள். கூட்டம் குழப்பத்தில் முடிந்தது.

இரவு பன்னிரண்டு மணி எங்கும் நிசப்தம்! 'டேய், அப்துல்லா கதவைத்திற!' அனந்தராமனின் குரல் எதிரொலித்தது. கூட நின்றிருந்த ஐம்பது பேர்களும் தடதடவென்று கதவைத் தட்டினர். அப்துல்லா விழித்துக் கொண்டான். கதவைத் திறக்கவேயில்லை.

கதவு பிளந்தது. காலிகள் உள்ளே நுழைந்தனர். அப்துல்லா அடி பொறுக்க முடியாமல் கதறினான். கலங்கவில்லை, அந்த தடியர் கூட்டம். கருத்து வேற்றுமை இருப்பது இயல்பு, எடுத்துச் சொல்லிக்கொள்வதும் முறை, அதுவும் அரசியலை துணுக்கு துணுக்காக வெட்டி வெட்டி கடித்துச் சுவைக்க வாய்ப்புள்ள கல்லூரியில் புரட்சிக் கருத்துக் கொண்டுள்ளான் என்பதற்காக அடி பட்டான் அப்துல்லா.

அப்துல்லா 'ஆஸ்பத்திரி'யில் படுக்கையில் கிடந்தான்.

காலை மணி ஒன்பது. கையில் இரண்டு சாத்துக்குடி பழங்களுடன் நளினி உள் நுழைந்தாள். அப்துல்லாவிற்கு ஆச்சர்யம்! அவள் தன்னைப் பார்க்க வருவாளென்று எதிர்பார்க்கவில்லை.

நளினி—?

அப்துல்லாவையும், அனந்தராமனையும் அடுத்தடுத்து நிறுத்தி நமக்கு அறிமுகப் படுத்திய அதே பேரேடு நளினி என்ற ஒரு பெயரையும் நமக்கு நினைவூட்டிற்று. கல்லூரியில் பெண்கள் பெயரை ஆசிரியர்கள் தான் வாய்விட்டு அழைப்பதில்லையே! ஆகவே, அந்த வேலையை மாணவர்கள் எடுத்துக்கொண்டார்கள். எப்பொழுதும் 'நளினி நாமாவளி' தான்.

'ஹெலன் ஆப் அவர் காலேஜ்'—இது நளினி பெற்ற பட்டம். அவளுடைய மாணவத்தோழர்களிடமிருந்து!

நளினி எப்பொழுதும் இரட்டை ரோஜா மலர்களை கிளையோடு ஒடித்து தலையில் அணிந்து கொள்வது வழக்கம். ஆகவே, அவளுக்கு 'ரோஸ்' என்றொரு புதிய பெயர் அளித்தார்கள். சிலர் ரோஜா மலரை வகுப்பிற்கு கொண்டு வருவார்கள், 'ரோஸ் பஜனை'யில் அவ்வளவு அளவு கடந்த வேட்கை!

'ரோஸ்'—

ஆம், உண்மையில் அழகான பெயரைத் தான் தெரிந்தெடுத்திருந்தார்கள். அவள் அன்றலர்ந்த ரோஜா தான். பூக்கும் ரோஜா சிரிக்கும், பறிப்பவரை முள்ளால் குத்தும். பிறகு பணியும். முடிவில் வாடும். ஆனால் அவள் 'ஜீவனுள்ள ரோஜா'—நடமாடும் நறுமலர்! அந்த அழகு ரோஜாவைக் கொய்ய அத்தனைபேருக்கும் ஆசை—ஆசை எப்பொழுதும் பெரிது, ஆனால் அகப்படுவது குறைவு தானே!

'அவளது செக்கச்சிவந்த கன்னங்கள் மாம்பழங்கள் தான். வைரக்கோடுகள் படிந்த உதடுகள் குவியும் போதும், விரியும் போதும், பார்ப்பவர் இதயத்தையே அமுக்கிப்பிழிவது போலத்தானிருக்கும்!

'விழியிலே வெட்டுத்தான் மொழியிலே தேன் சொட்டுத்தான். நல்ல முகவெட்டுத்தான், உயிரைப் பறிக்கும் உடற்கட்டுத்தான்'.

ஆயிரம் பேர்கள் படிக்கிறார்கள்—அதுவும் அவர்கள் எல்லாம் எதிர்கால கம்பராம், காளிதாசராம், ஷேக்ஸ்பியராம், ஷெல்லியாம்..........!

ஆளுக்கொரு வருணனை தருவார்கள். அத்தனையும் தரமுடியுமா?

அந்த நளினிதான் அப்துல்லாவைப் பார்க்க வந்தாள். அப்துல்லா ஆச்சரியப்பட்டான்

'பலமான அடியோ'

'அடி பலமில்லாவிட்டாலும், அதிர்ச்சி அதிகம்'

'ஏன்?'

'இப்படி ஒரு கூட்டம் இந்த நூற்றாண்டிலும்.......'

'இருப்பது கேவலந்தான்'

'நளினி, சாதாரண குப்பத்திலிருந்தால் கவலைப்படமாட்டேன். கலை பயிலும் கல்லூரியில் கருத்து வேற்றுமைக்காகக் கட்டையால் அடிக்கும் மட்டிக் கூட்டம் இருப்பதை எண்ணித்தான் வருந்துகின்றேன்.'

நளினி நெருங்கி அவன் நெற்றியைத் தொட்டாள். அப்துல்லாவின் உடலில் 'மின்சார ஓட்டந்' தான்!

'நான் வருகிறேன்' என்றாள் நளினி. அரைப்புன்னகையால் விடையளித்தான்.

அன்றைக்கு இரயிலடியில் மாணவர்கள் ஏராளமாகக் கூடியிருந்தனர். எல்லோரும் ஏக மகிழ்ச்சியாக இருந் தனர். ஏன்?

டில்லியில் நடக்கும் எல்லா கல்லூரிப் பேச்சுப் போட் டிக்கு அப்துல்லாவும், அனந்தராமனும் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். அவர்களை வழிகூட்டியனுப்பவே வந்திருந் தனர். அக்கூட்டத்தில் மாணவியரும் நின்றிருந்தனர்.

வண்டியில் இருவரும் ஏறியமர்ந்தனர். அங்குகூட பக்கத்தில் பக்கத்தில் உட்காரவில்லை. எதிர் எதிரே உட் கார்ந்திருந்தனர். பேச்சுகூட இல்லை! அப்பொழுது நளினி வந்தாள். அப்துல்லாவின் முகத்தில் ஆனந்தம் தாண்டவமாடிற்று. நளினியின் முகத்தில் பெருமிதம் கொப்பளித்தது. இருக்காதா? தன் இதய வீணையை மிழற்றுபவன் இவனென்று முடிவு கட்டிவிட்டபின் அப் துல்லாவின் பெருமை, அவளின் பெருமிதத்திற்குரிய தல் லவா? இரு கைகளும் சேர்ந்தன. அழுந்தப்பற்றின. பெருமூச்சால் 'போய் வருக, வெற்றியுடன்' என்றாள்.

அனந்தராமன், அப்துல்லா ஒரே கூடாரத்தவர் — ஆண்கள் என்ற முறையில், ஆனால் இரண்டு வட துருவங் கள்!

நளினி பெண்ணென்ற வகையில் வேறொரு கூடாரத் தவள்—தென் துருவம் அவள்!

அப்துல்லாவும், நளினியும் தழுவத் தயாராகிவிட்டனர் வடதுருவமும், தென் துருவமும் கவர்ச்சி செய்து கொள் கின்றன!

• •

ஆணுக்கும், ஆணுக்கும் அவ்வளவு நெருக்க மிருப்ப தில்லை. பெண்ணுக்கும் ஆணுக்கும் எவ்வளவு கவர்ச்சி? இல்லாவிட்டால் கல்லூரியில் காளையர்கள் ஒரு பெண்ணைச் சுற்றி அப்படி ஓடுவார்களா?

கல்லூரியில் எழுத்துகள் பொதுவாக ஒன்றாக இருப்ப தால் அப்துல்லாவையும் அனந்தராமனையும் அடுத்தடுத்து ஒட்டி நிற்க வைத்துவிட்டது 'பேரேடு'. ஆனால் அவர்கள் வாழ்க்கையில் அ ப் ப டி நெருங்கியவர்களா?— நெருக்க மிருக்கட்டும், பகையின்றியாவது இருந்தவர்களா? பகை நாளுக்கு நாள் வளர்ந்து நாலாயிரமடிக்கு மேலாகிவிட்டது. வாழ்க்கையில் வெகு தொலைவில் நின்று கொண்டிருந்த அவர்கள் சமயம் நேருகிற பொழுது மட்டும் இமயமும் ஆல்பஸும் இடித்துக்கொள்வதுபோல மோதுவார்கள்— கைகளாலல்ல, வாயால், ஒரு முறை தவிர! வாய் வீச்சு 'வாடர்லூ' ஒரு சமயம் கைவீச்சு 'பிளாசி' யாகிவிட்டது!

நளினியோ பேரேட்டில் வெகு கோடியில் இருக்கி றாள், அப்துல்லாவிற்கும் அவளுக்கும் இ டை வெளி வெகு நீளம். ஆனால் வாழ்க்கையில் மிகநெருக்கம். நடந்து போகும் பொழுது இடையில் தென்றல் போகக்கூடாது என்று கருதுகிற அளவு நெருக்கம்!

இரண்டு 'அ'க்களுக்கும் அந்த'ந' மே ல் ஆ சை, மோகப்பார்வை! வெற்றி முதல் 'அ' வுக்கு— ஆ க வே அப்துல்லா ந ளி னி யை த் தழுவினன். அனந்தராமன் பொறுமையோடு வேடிக்கை பார்த்தான்.

இரண்டு வட துருவங்கள், ஒன்று தென் துருவம் — தழுவும் துருவங்களைக் க ண் டு தவித்தது ஒரு தனி வட துருவம்!



# சீதையை மணந்த இராவணன்

ஜானகியுடன் வந்து சேர்ந்தார் இராமச்சந்திரன், இராம பால விநோத சபாவின் சொந்தக்காரர். அவள் அழகியாக மட்டு மிருந்தால், நாடக மேடையில் அப்படிப் பெயர் வாங்கி யிருக்கமாட்டாள். அவள் அழகி மட்டு மல்ல, சிறந்த நடிகைகூட. அவளது நடிப்பு, உண்மையில் எவருக்கும் பிரமிப்பைத்தான் தரும். சோக கட்டமானல் பார்ப்பவர் அழுவர்; இன்பச் சுவையானல் மக்கள் தங்களையும் அறியாமல் சிரித்து விடுவர். அத்தகைய உயிர் நடிப்பு—ஜானகி, நாடகவானிலே ஜொலித்திடும் உயிருள்ள நட்சத்திரம்! நடிப்புலகிலே தன்னந்தனியாக தனக்கிணையும், எடுப்பும் இல்லாது உலவிடும் உயிர் ஓவியம்! அவள் நாடக மேடையிலா தோன்றினள், அல்ல, அல்ல, நாட்டு மக்களின் இதய அடிவாரத்தில் 'கதகளி' ஆடிக்கொண்டிருந்தாள்!

முதலாளி இராமச்சந்திரருக்கு, பிரதம நடிகை ஜானகியின் மீது ஓரக் கண்ணேட்டம், ஆகவே அவளை வட்டமிட்டார். ஆனல் ஜானகியோ அந்தக் காதல் நரம்புகளை அறுத்துவிட்டு தானே இயங்கும் வீணையானள்!

இன்பபுரியில் வசித்திடும் வாலிபர்களுக்கு இராம பால விநோத சபா ஒரு கேளிக்கைக் களமாகத்தான் தோன்றியது. அவர்கள் நாள் தவறினலும் தாங்கள் தவருது விஜயம் செய்வார்கள். அவர்களுக்கு அப்படியொன்றும் நாடகத்தைப் பற்றிய கவலேயோ, அக்கரையோ கிடையாது. ஜானகியின் திவ்ய வதன தரிசனம்

கிடைத்தால் அது போதும் அவர்களுக்கு! அவர்களிலே ஒருவன் ஜானகிராமன்—அவன் பெயரில் மட்டுமல்ல, உண்மையிலேயே அந்த ஜானகிக்கு ராமன் ஆக எண்ணினன், திட்டமிட்டான். பல திட்டங்கள் தொடக்கத்திலேயே பட்டுப் போய்விட்டன.

கடைசியில் ஒரு முயற்சி—வெற்றிதான் அவனுக்கு? முயற்சி யுடையார் இகழ்ச்சியடையார் அன்றே! ஜானகிராமன் நாடகமேடை நடிகனுனன். பிரபல 'வில்லன்' எனப் பெயரெடுத்து விடடான். இப்படி ஆரம்பித்தான் தனது காதல் வேட்டையை—வேட்டையில் வெற்றி பெற்றுன் வேடன், வீழ்ந்தது அந்தப் பாயாத மான்!

பார்வை — சாதாரணமானது தான்! புன்னகை — படையெடுப்பின் அடுத்தபடி! 'இன்றைக்கு உன் நடிப்பு அபாரம், நான் மூக்கின்மீது விரலை வைத்து விட்டேன்'— முற்றுகை இறுகுகிறது என்று அர்த்தம் அந்த வார்த்தைகளுக்கு! 'இன்று கடற்கரைக்குப் போகிறேன், நீ வருகிருயா?—இது கேள்வியல்ல; வாள் வீச வாய்ப்புதேடும் காதல் வீரனின் போக்கு! 'கண்ணே, ஜானகி, நீ என் பெயரின் முன்னே மட்டும் ஒட்டிக்கொண்டிருக்கவில்லை; என் இதயக் கோட்டையின் ஏகசக்ரவர்த்தினியே நீதான்' —இதுதான் நேரடித் தாக்குதல் நடைபெறுகிற அளவு வாய்ப்பும், வசதியும் ஏற்பட்டுவிட்டால் பணிவுதான் போரின் முடிவாக இருக்கும். அதுவும் நிபந்தனையற்ற சரணுகதியாக இருப்பதுதான் வாடிக்கை. அந்த வாடிக்கைக்கு விரோதமாக நடந்து கொள்ளவில்லை ஜானகியும். இல்லாவிட்டால் 'அன்பரே, என் உடல், பொருள் ஆவியை அன்றே, முதன் முதல் மேடையில் சந்தித்த பொழுதே

தங்களுக்குத் தத்தம் செய்து விட்டேன்' என்று சொல்வாளா ஜானகி?

பிறகு........'என்னை ஊரரிய நீங்கள் மணக்க வேண்டும்' என்றாள். 'ஆகட்டும் கண்ணே' என்று அட்டியின்றி விடை சொன்னான். சொன்னானே தவிர அது அவ்வளவு எளிதான காரியமாக முடியவில்லை. ஏனெனில் நாடகங்களில் மட்டுமே ஜானகிராமன் 'வில்லனே' தவிர, அவனுடைய காதல் வாழ்வில் குறுக்கிடும் எதிரி இராமச்சந்திரனை வீழ்த்தும் பலம் அவனுக்கு ஏது?

ஜானகிராமன் திட்டமிட்டான்.... —

அன்று சம்பூர்ண இராமாயணம், பட்டாபிஷேக நாடகம் ஆகவே ஏராளமான கூட்டம், எள் விழவும் இடமில்லை!

கதை வளர்ந்து கொண்டே வந்து சீதையின் சுயம்வரக் கட்டத்தில் வந்து சேர்ந்தது. ஜனக மகாராஜன் மணி மண்டபத்தில் அமர்ந்திருந்தார். மற்ற ஐம்பத்தாறு தேசத்து மன்னாதி மன்னரும் மருங்கிருந்தனர். ஒரு பெரிய பெட்டியில் சிவதனுசு வைக்கப்பட்டிருந்தது, ஒவ்வொருவராக வில்லை யெடுத்து வீரம் பேசி தோற்றனர். மணமாலையை ஏந்திநின்ற சீதையின் சிங்காரமுகம் சுருங்கி சுருங்கி விரிந்தது!

இராவணன் வேகமாக சுயம்வர மண்டபத்தில் நுழைந்தான். மக்கள் கைதட்டி வரவேற்றனர். ஆனால் ஐம்பத்தாறு தேச மன்னர்களும் நடுங்கி யொடுங்கினர். ஜனகரின் முகம் சிவந்தது. ஆனால், சீதையின் உதட்டிலே சிரிப்பு தவழ்ந்தது!

• •

'உமது பெண்ணை மணக்க நிபந்தனை என்ன?'

'இந்த சிவதனுசுவை எடுத்து வளைத்து நாணேற்றி ஒடித்திட வேண்டும்'

'ஒடித்து விட்டால்?'

'அதோ அந்தத் துடியிடை உம்மைத் தழுவுவாள்'

இராவணன் குனிந்தான். விண்ணென்ற ஒலி கேட்டது. பட்டென்றது. இற்று இரண்டாக விழுந்தது அந்த வில்! சபையோர் சிரித்தனர். சிரிப்பு அடங்குவதற்குள் சீதை ஓடோடியும் சென்று மணமாலையை இட்டாள். தனது கரத்தால் அவள் இடையைப்பற்றி இறுகத் தழுவினான் — சிரித்தான் — சிரித்தாள் — சீதையை மணந்தான் இராவணன்!

'திரையை விடு, திரையை விடு'

'ஐயோ யாரோ இழுத்துக் கட்டிவிட்டார்களே'

ஜனகன், முடி, உடைகளைக் களைந்து விட்டு ஓடி வந்தான். அதற்குள் கூட்டம் குழப்பமாகி விட்டது.

ரௌடி ரங்கனும், அவனுடைய அடி ஆள் சோமுவும் கத்திக்குத்துக் கண்ணுசாமியும் மேடைக்கு வந்தனர். அவர்கள் போட்ட கூச்சலில் கூட்டம் அடங்கி அமைதியாக அமர்ந்தது. அவர்கள் மூவரும், மகாராஜாதி ராஜ ஜனகனாக நின்று கொண்டிருந்த இராமச்சந்திரனை அழைத்தனர். அவர் மேடையின் மத்தியில் நின்றார்.

'நீர் என்ன சொன்னீர்?' — ரௌடியின் கேள்வி இது!

'எப்போது?' — இராமச்சந்திரன் சந்தேகம்!

'இராவணன் கேட்டபோது....!'—கையாள் சோமுவின் விளக்கம்!

'வில்லை முறித்தால், சீதை கிடைப்பாள் என்று முதலாளியின் நடுங்கிய குரலில் வந்த பதில்!

'சரி, சொன்னபடி செய்யும்'

முதலாளி இராமச்சந்திரர் விழித்தார். ஆனால் அந்த மூவரின் பெயர் கேட்டாலே நடுக்கம். ஆகவே மெதுவாகச் சொன்னார், அதுவும் பயந்து கொண்டே!

'கதைப்போக்கு மாறிவிடும். புண்ணிய கதை, பாவம். சிறு தவறு நடந்துவிட்டது. மன்னிக்க வேண்டும்.'

'ஜனகன் சொன்ன சொல் தவறியதாக முடியக்கூடாதல்லவா, அதற்காகத்தான் சொல்கிறோம்.'

மூவரும் சிரித்துக்கொண்டே கூறினர். பார்த்திருந்த கூட்டம் பழையபடியும் வெடிப்புச் சிரிப்பை வீசியது.

ஜனகர் சீதையின் கரத்தைப் பிடித்து இராவணன் கையில் கொடுத்தார். மேளம் முழங்கியது. கூட்டம் கட்டுக்கு மீறி சிதறியோடியது. மீண்டும் குழப்பம் வந்துவிட்டது. திரை கிழிந்தது. நடிகர்கள் ஓடினர். வாத்தியக்காரர்கள் மறைந்தனர். மின்சார விளக்குகள் உடைந்தன.

• •

பத்து தலைகளை கையால் தூக்கிக்கொண்டு, மற்றொரு கையில் சீதையைப் பிடித்துக்கொண்டு ஓடிவந்தான் நாடக மேடை இராவணன். அந்த இரவில் கட்டை வண்டிகள் அந்த சாலை வழியே போய்க்கொண்டிருந்தன. அவர்களில் ஒருவனிடம் பேரம் பேசி வண்டியில் இருவரும் ஏறிக் கொண்டனர்.

'இராவணா, பாதகா, என்னை எங்கே கொண்டு செல்கிறாய்? என் பர்த்தா இராமச்சந்திரர் உன்னை விடமாட்டார்'

'சீதா தேவி, உன்னை இந்த புஷ்ப விமானத்தில் ஏற்றிக்கொண்டு எங்குப் போகிறேன் என்று சொல்லவேண்டுமோ? உன் பர்த்தாவா, பிதாவல்லவா இராமச்சந்திரர்! அவரை கவனித்துக்கொள்ள என் நண்பர்கள் மூவர் இருக்கின்றனர்.'

'அடியாளை அசோக வனத்திற்கா அழைத்து செல்கிறீர் சுவாமி!'

'அசோகவனத்திற்கல்ல கண்ணே, அது அந்தக் கம்பன் எழுதிய கட்டுக்கதை, நான் உன்னை அழைத்துச் செல்வது வாழ்க்கை வனத்தில் இருவரும் ஓடி விளையாட' இருவரும் சிரித்தனர்!

சீதை 'இராவணன்' மார்பில் சாய்ந்தாள், ஜானகிராமன் தன் பெயரை நிலை நாட்டினான்! கட்டைவண்டியின் கிரீச் சத்தத்தில் 'இச்'சென்று எழுந்த வேறொரு சத்தம் கேட்காமலே போய் விட்டது!



# வெள்ளிப் பணம்

சேலத்திலிருந்து நாமக்கல் போகும் வழியில் மூன்று கார்கள் பறந்து சென்றன. திடீரென ஒரு இடத்தில் கார்கள் நின்றன. அங்கு ஒரு கார் எரிந்து சிதைந்து கிடந்தது. பக்கத்தில் ஒரு பிணம் அலங்கோலமாகக் கிடந்தது.

கார்களிலிருந்து 'போலீஸ்' அதிகாரிகள் திடு திடு வென இறங்கினர். ஒரு காரிலிருந்து மட்டும் ஒரு கனவானும், ஒரு அழகு வடிவும் நங்கையும் இறங்கினர்.

'அடே 1402! டாக்டரை அழைத்துக்கொண்டு போய் அந்தப் பிணத்தைக் காட்டு'

'போலீஸ் சர்க்கிள்' கட்டளை!

'டாக்டர் சார்! பிரேத சோதனையை சட்டென்று முடியுங்கள். பிணம் கெடுவதற்குள் ஊருக்குக்கொண்டு போக வேண்டும்' என்றார் அந்த கனவான். அவரும் 'டாக்ட'ருடன் தொடர்ந்து சென்றார். பிணங்கிடக்கும் இடம் வரை இருவரும் பேசிக்கொண்டே சென்றனர்.

'சர்க்கிள்' சந்தானம் அந்த இடத்தை சுற்றிலும் ஆராய்ந்தார். காரை உற்று நோக்கினர். பிண நாற்றம் அடித்தது! சற்றுத் துருவிப்பார்த்தார். முன் பக்கங்களில் குருதிக்கரை பிடித்திருந்தது என்று புரிந்து கொண்டார். மேலும் மேலும் ஆராய்ந்தார். இரண்டு காலடிகள் இங்கு மங்கும் ஓடியிருப்பது தெரிந்தது. இன்னொருவர் அடி

களின் சுவடு கோடு கிழித்தது போன்று அமைந்திருந்தது. அந்தச் சுவடுகளைப் பின்பற்றிச் சென்றார்.

ஒரு இடத்தில் இரத்தம் தோய்ந்திருந்தது. அதைக் கண்டதும் ஆச்சர்யத்தால் அவரதுகண்கள் அகலவிரிந்தன. மேலும் சிறிது தூரம் சென்றார். ஒரு வெள்ளிப் பணம் கிடந்தது. பாதி இரத்தக்கறை பிடித்திருந்தது. அதை எடுத்து உடனே பத்திரப்படுத்தி விட்டார். பிறகு 'டாக்டர்' சோதனை செய்யுமிடத்திற்குச் சென்றார்.

'இது எதிர்பாராத விபத்தினல் ஏற்பட்ட மரணமே. காரில் ஏற்பட்ட திடீர் தீ விபத்திலிருந்து மீளத் துள்ளிக் குதித்த போது மேல் பாகத்திலே மண்டையில் தாக்கப் பட்டு இறந்திருக்க வேண்டும். உடம்பில் வேறெங்கும் எந்த வித காயமும் கிடையாது. இது சாவுதான், கொலையல்ல!'

என்றார் 'டாக்டர்' ராவ்.

அங்கே நின்று கொண்டிருந்த அந்த அழகி, இதைக் கேட்டதும், முகத்தை தன் கைகளில் புதைத்துக்கொண்டு அழுதாள். விம்மினள். கதறினள். அந்த கனவான் அவளை எரித்து சாம்பலாக்கி விடுபவர்போல பார்த்தார். இந்த பார்வையைக் கண்ட அவள் அழுகைக் குரல் நின்றது. ஆனல் கண்களில் மட்டும் நீர் ஊற்றெனப் பெருக்கெடுத்தோடியது. இந்த மர்மக் கதையை 'சர்க்கிள்' சந்தானம் குறிப்பாகக் கவனித்தார்.

இந்த நேரத்தில் ஒரு கார் வெகு வேகமாக வந்து நின்றது. அதிலிருந்து ஒரு பெண்ணும் ஒரு முரட்டு ஆளும் இறங்கி வந்தனர். பிணத்திடம் ஓடினர்.

'தம்பி! உனக்கு இப்படியா ஆண்டவன் எழுதி வைத்தான். கோபால்சாமி! இந்தக் கோர மரணத்திற் காகவா உன்னை மகனைப் போல வளர்த்தேன்.'

என்று கதறினாள் அவள். பொருமினான் அவன்.

பிரேத விசாரணையைத் தொடங்கினார். ஒவ்வொருவ ராக அழைத்துக் கேள்வி மேல் கேள்விகளைப் போட்டார்.

'நீங்கள் யார்?'

'என் ஊர் நாமக்கல். பெயர் சென்னியப்பக் கவுண் டர்!'

'இறந்தவரைத் தெரியுமா?'

'இறந்தவன் என் மோட்டார் டிரைவர் கோபால் சாமி. சிறு வயதிலிருந்தே என்னிடம் இருப்பவன். நம் பிக்கை யுள்ளவன். நல்லவன்'

அந்தக் கனவான் சென்னியப்பக் கவுண்டரின் குரல் கம்மியது. அடுத்தபடி அந்த அழகி — அவள்தான் கவுண் டரின் மூன்றுவது காதல் மனைவி பானுமதி — கண்ணீரைத் துடைத்துக் கொண்டே கவுண்டர் சொன்னதை வற் புறுத்தினாள்.

'கோபால்சாமி என் தம்பிங்க. என் புருஷன் செத்து பத்து வருடமாவுதுங்க. கட்டி மூணு வருசத்திலே செத் துப் போய்ட்டாரு. அதிலே இருந்து என் தம்பி தான் எனக்கு எப்பாடு பட்டாவது கஞ்சி ஊத்தி வந்துதுங்க. தம்பிக்கு தம்பியா; பிள்ளைக்கு பிள்ளையாய் வளர்த்தே னுங்க. நேற்று சேலம் போய்விட்டு வரேன் அக்கா என்று கிளம்பிச்சு. இன்னைக்கு இப்படி ஆச்சுதுங்க. நான் இனி என்ன செய்வேன் அடி ஆத்தாடி!'

கோபால்சாமியின் தமக்கை தனபாக்கியம் இடையிடையே அழுதுகொண்டே இப்படி சொல்லி முடித்தாள். அடுத்தபடியாக அந்த முரட்டு ஆள் விசாரிக்கப்பட்டான்.

'என் பெயர் இடும்பன். கோபால்சாமி என் உசிருக்கு உசிரானவன். நேற்று புறப்படுகிற வரையில் கூட இருந்தேன். நானும் கவுண்டரிடம் வேலை செய்கிறவன் தான்'

இடும்பன் குரலை யாரோ அழுத்திப் பிடிப்பதுபோல நிறுத்தி நிறுத்திக் கூறினன். தொண்டையை ஏதோ வந்து அடைப்பது போல எச்சிலை விழுங்கினன்.

எல்லாவற்றையும் பதிவு செய்துகொண்டு, சாவுதான் கொலையல்ல என்று முடிவுகட்டி பிணத்தை அவர்களிடம் கொடுத்து விட்டு 'சர்க்கிளு'ம், அவரது பணியாளர்களும் கிளம்பினர். கவுண்டர் தனித்து அவர்களை அழைத்து சென்றார். ஏதோ சிறிது நேரம் பேசிவிட்டுத் திரும்பினர். பிறகு இரண்டு கார்கள் புறப்பட்டு சென்று விட்டன. கவுண்டர் உடனே பிணத்தை எடுத்து காரில் வைத்துக் கொண்டு புறப்பட்டார்.

* * *

'சர்க்கிள்' சந்தானம் தனது அறையில் தனது நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். அவர் எதனையோ சிந்தனை செய்து கொண்டிருந்தார். அவர் எதிரில் கிடந்த மேஜையின் மீது அந்த கறை பட்ட வெள்ளிப் பணம் இருந்தது. அவர் 'வில்சை' புகைத்துக்கொண்டு, வட்டமாகவும் நெளி நெளியாகவும் ஓடும் புகையை ஒரு கணம் பார்ப்பதும், மறுகணம் வெள்ளிப் பணத்தைப் பார்ப்பதுமாக இருந்தார். சிறிது நேரம் கழித்து எழுந்து குகையில் புலி

உலவுவதுபோல உலவினர். ஒன்றும் புரிவதாகத் தெரியவில்லை.

உடனே விளக்கை அணைத்து படுக்கை யறையினுள் நுழைந்தார். வத்சலா தூங்கிவிட்டாள். அவருக்கென்று வைக்கப்பட்டிருந்த பால் ஆறிக் கிடந்தது. அதனை எடுத்து ஒரு வாய் அருந்தி படுக்கையில் படுத்தார். தூக்கம் மெதுவாக அணைத்தது.

ஹா! ஹா!....ஹா!!!

சிரிப்பொலி அத்துடன் வளையல் ஒலி கலந்து வந்தது. சந்தானம் திடுக்கிட்டு எழுந்தார். ஒரு குலுக்கு நடைக்காரி உதட்டில் குறுஞ்சிரிப்பை சுமந்து நின்ருள். ஆனல் அவள் மண்டையிலிருந்து இரத்தம் ஒழுகிக்கொண்டிருந்தது. சட்டென்று துப்பாக்கியைக் கையிலெடுத்துக் கொண்டு, ஏற்கனவே தனது 'டார்ச் லைட்'டின் ஒளி வட்டத்தில் தெரிந்து கொண்டிருந்த அவளிடம் நெருங்கினர்,

'நீ யார்' அதட்டிக் கேட்டார்.

'நான்தான் வெள்ளிப்பணம் தெரியாது போலக் கேட்கிறீரே'

'உன் முகத்தில் என் இரத்தம்? கொஞ்சம் குரலைத் தாழ்த்தினர்.

'உங்களைப் போன்ற உத்தமர் செய்த கைங்கரியம்'

'ஏன் இங்கு வந்தாய்?'

'காரணத்தோடு ஒரு பயங்கரக் கொலையின் உண்மையை உணர்த்த—கேட்பீரா? நீர் கேட்டாலும், கேட்காவிட்டாலும் இதனை நான் சொல்லவேண்டும்.

டிரைவர் கோபால்சாமி—தானே சாகவில்லை. இரும்புக் கம்பத்தால் மண்டையிலடிக்கப்பட்டு இறந்தான். அடித்துக்கொன்றவன் அவனது ஆருயிர்த் தோழன் இடும்பன். கவுண்டரின் கட்டளையின் பேரில்தான் செய்தான்'

'அதிசயம்!'

'அதிசயம், ஆனால் உண்மை'

'இது உனக்கு எப்படித் தெரியும்?'

'இத்தக் கொலைக்கு நான்தானே முழுப்பொறுப்பாளி இதற்கு மட்டுமென்ன! உலகத்தில் நடக்கும் எந்த காரியத்திற்கும்—நன்மை பயப்பதானாலும், தீமை விளைப்பதானாலும்—நான் தான் அடிப்படை!'

'என்ன துணிச்சல்—கொலைகாரி!'

'நான் விசித்திரமான ஒரு அடிமை. என்னை எவன் வேண்டுமானாலும் மணக்கலாம். புணரலாம். ஆனால் ஒருவனிடம் நிலைத்து நிற்பதும் இல்லை. எவனிடம் முதலில் கொஞ்சிக் குலவுகிறேனோ, அவனையே அடித்துக் கணத்தில் கொல்லவும் தயங்கமாட்டேன். என் தொழில் அப்படி! இந்த விநோதமான குணத்துடன் வாழும் பெண்ணணங்கு வெள்ளிப்பணம்!

'கொலையைப் பற்றி வேறென்ன தெரியும்?'

'வேறு என்ன, கொலை முழுவதுமே தெரியும். அணுவணுவாகச் சொல்லுகிறேன். கேள்!

சென்னியப்பர் காமப்பித்தர். மனைவியர் இருவரும் வெகு விரைவிலேயே மாண்டனர். தனது ஏராளமான சொத்துக்களை கட்டியாள பிள்ளை வேண்டும் என்று தவித்தார். பெண் பார்க்க என்னை அனுப்பினர். பானு

மதியைக் கூட்டி வந்துவிட்டேன். அவளுடன் தானே இருக்கவேண்டும். வக்கீல் வரதாச்சாரியார் வீட்டிற்கு வழக்கு சம்பந்தமாகப் போகத் தொடங்கினர். என்னை இழுத்துச் சென்றார். வழக்குக்கு மட்டும் வக்கீல் வீடு பயன்படவில்லை. இன்ப கேளிக்கை விலாசமாகவும் மாறியது.

பானுமதியின் பசி வளர்ந்தது. கவுண்டரின் கள்ள லீலைகள் குறையவில்லை. வரவரப் பெருகிவந்தது.

ஒரு நாள் கவுண்டர், வக்கீல் வரதாச்சாரியுடன் சென்னைக்குப் புறப்பட்டார். கோபால்சாமி அவர்களை இரயிலடியில் கொண்டு விட்டு வந்து காரை நிறுத்தினன். அப்பொழுது இரவு மணி பத்து. மாடியில் பானுமதி நின்று கொண்டிருந்தாள்.

'கோபால்சாமி! ஐயா ஊருக்குப் போய் விட்டாங்களா?'

'போய்க்கொண்டே இருப்பாங்க'

'அப்படியே ஏறி மாடிக்கு வாயேன்'

'ஏன் அம்மா?'

'அறையில் ஒரே புழுக்கம். அதனல் வெளியே படுத்துக்கொள்ளலாம் என்று பார்த்தேன். எனக்குத் தனியாகப் படுத்துக்கொள்ள பயமாயிருக்கு. நீ இங்கேயே படுத்துக் கொள்ளேன்'

'ஏன் அம்மா, சமையல் செய்யும் கிழவி எங்கே?'

'அந்தக்கிழம் இந்நேரம் குறட்டை விட்டிருக்கும்'

'அப்படியானல் கீழேபோய் பாய், தலையணை.........'

'வேண்டாம், ஐயா படுக்கையிலேயே படுத்துக் கொள்'

'அ....ம்....மா....அதெல்லாம் வேண்டாம்'

பானுமதி, உடனே 'அடி, வெள்ளிப்பணம்' என்ருள். அவனிடம் என்னைக் கூட்டி விட்டாள். அவன் என் சுகத்தால் போதையானன். பஞ்சனைக்கு அன்று உடம்பு வலி!

இந்தக் காமவேட்டை பரவியது. கவுண்டர் செவிக்கு எட்டியது. ஒரு நாள், ஐயோ! காரினுள்ளேயே கோபால்சாமியும் பானுமதியும்........கவுண்டர் பார்த்து விட்டார். நேராக தோட்டத்திற்குள் நுழைந்தார்.

'இடும்பா......'

'எஜமான்'

'அடே, கோபால்சாமியை என்ன நினைக்கிருய்'

'என் உசிருக்கு உசிரு'

'சீ, கழுதை இங்கே வா'

கவுண்டர் காதுக்குள் எதனையோ சொன்ஞர். இடும்பன் முகம் விகாரமடைந்தது. உடனே என்னை இழுத்து அவன் கையில் கொடுத்து விட்டார். என்னைப் பார்த்ததும் சிரித்தான்.

'ஆகட்டுங்க' என்ருன்.

அன்று இரவு இடும்பனுந்தான் காரில் போனன். சாராயக்கடையில் நிறையக் குடித்தான். கோபால்சாமியும் குடித்தான். இருவரும் போய்க்கொண்டிருக்கையில் தான் கார் நின்றது. சரிபார்க்க கோபால்சாமி முயன்று கொண்டிருந்தான். போதையினல் கையிலிருந்த சுருட்டை

நெருப்புடன் காரிலேயே நழுவவிட்டான் இடும்பன். இரண்டு கருங்கற்களைத் தேடி கோபால்சாமி அலைந்து திரியும்போது பின்னுலிருந்து இரும்புத் தடியால் தாக்கினுன். இரத்தம் பெருக்கெடுத்தது. இதே நேரத்தில் கார் தீப்பிடித்துக் கொண்டது! ஒரே அடியில் உயிர் நீத்த அவனை காரின் அருகில் இழுத்துப் போட்டுவிட்டு இடும்பன் ஓடினுன். அப்படி ஓடும்போது தான் நான் தவறி விழுந்தேன்.

'பயங்கரமான கொலை'

'இத்தனைக்கும் காரணம் நான். வெள்ளிப்பணம் விசித்திரமான அடிமைப் பெண் மட்டுமல்ல, விநோதமான பிறவி! தொட்டால் துவளுவேன். ஒன்றுக்குள் ஆயிரம் இரண்டாயிரம் பெண்களாக இருப்பேன். தேய்வது போலவே வளர்வேன். என் கடைசி சொட்டு இரத்தத்திற்கும் உயிர் உண்டு. பாரேன் என் சக்தியை. என்னுல் பானுமதி வந்தாள். பானுமதியும் என்னைக் காட்டித்தான் கோபால்சாமியை மடக்கினுள். உயிர்க்குயிர் நண்பர்களை பிரித்து ஒருவனை கொலைகாரனுகவும் மாற்றிவிட்டது எனது இதழ்தந்த போதை! இது கிடக்கட்டும்; சொந்த அக்காள் இத்தனை உண்மையும் அறிந்தவள், என்னைக் கண்டதும் தம்பியை மறந்து விட்டாள். சுற்றித்திரிவானேன்! என் இன்பங் கிடைக்குமென்று டாக்டர் புளுகினுர். நீரும் கடமையை மறந்து, உண்மையை ஒருவாறு ஊகித்தும் விட்டு விட்டீரே'

'வெள்ளிப் பணத்தின் விநோத விளையாட்டு'

சந்தானம் குளறினுர். அவர் மனைவி வத்சலா 'கனவிலும் லஞ்சமா?' என்று தட்டி எழுப்பினுள்.

சந்தானம் திடுக்கிட்டு எழுந்தார். தன் அறைக்கு வேகமாகச் சென்றுர்.

கறைபட்ட வெள்ளிப் பணம் கண்ணைச் சிமிட்டிற்று!



'...காவலுக்குப் படுத்திருத்த என்னை, அந்த வெங்கிட்ட ராவ் காமத்திற்குப் பலி யிட்டான்...'

# செல்லாயி

டாக்டர் ராவ் அறையில் ஒரே இரைச்சல்! யாரோ ஒரு 'பட்டிக்காட்டான்' டாக்டரின் காலைப் பிடித்துக் கொண்டு கதறினன். 'ஐயோ! ஐயா! தயவு செய்து வாருங்கள். அவள் கிடக்கிறதைப் பார்த்தால் என் வயிறு எரியுது. எப்படியும் காப்பாத்தணும்'—என்று அழுகைக் கிடையினும் அவனது துடிக்கும் உதடுகளிலிருந்தும் வார்த்தைகள் தெரித்தன. டாக்டர் மனம் இளகிவிட்டது......! இல்லாவிட்டால் அவனை அன்புடன் தூக்கி ஆறுதல் கூறுவாரோ—?

டாக்டர், 'குப்பா! நீ முன்னே ஓடு! நான் உன் பின்னலேயே இன்னும் பத்து நிமிடங்களில் வந்து விடுகிறேன்' என்ருர் கனிவோடு. குப்பன் தயங்கினன்........பணமில்லாமல் அழைக்கிறேன் என்பதற்காக 'நாசூக்காக' மறுக்கிருரோ டாக்டர்? அதை வெட்ட வெளிச்சமாகச் சொல்லிவிட்டால் முதலாளியைக் கேட்டாவது கொடுத்துவிடலாமே! அவள் 'தோடு' இருக்கிறதே அதையாவது வைத்துக் கொடுக்கலாமே........என்று கண்கள் பேசின. அதைப் புரிந்து கொண்டாரோ என்னவோ டாக்டர், பயப்படாதே! நிச்சயமாக வருகிறேன். இதோ கிளம்பி விட்டேன். ஓடு!' என்ருர். இதையும் தடுத்து நிற்கத் தைரியம் இல்லை அவனுக்கு! கண்ணீரைத் துடைத்துக் கொண்டே வெளியேறினன்.

கம்பவுண்டர் கணேசன் மலைத்து விட்டான். மருந்து பெற வந்த மற்றவரும் அந்த 'மயானகாண்டத்தை'க் காணச் சகியாமல் கண்களை மூடினார்கள்.

*    *

ஒரு கயிற்றுக்கட்டிலில் ஒரு 'கொடி' படர்ந்திருந்தது. அவள் மிரள மிரள விழித்தாள்! அவள் பக்கத்தில் ஒரு குழந்தை படுத்து உறங்கிக் கொண்டிருந்தது. அது அழுது அழுது முகம் வீங்கி இருந்தது. வீங்கிய கன்னங்களில் கண்ணீர் வழிந்து, அப்படியே உலர்ந்து, வரி வரியாகக் கோடு படிந்திருந்தது. அவள் மெதுவாக அந்தப்பக்கம் தன் பார்வையைத் திருப்பினாள். அவள் கண்களில் நீர் திரண்டது. அந்தச் சிதைந்த கூறையின் கீழ் இந்தக் காட்சி. இந்த 'ஸீனில்' குப்பன் வந்து நுழைந்தான்.

'செல்லாயி! செல்லாயி!...' என்றான் குப்பன்.

'ம—ச்—சா—ன்' என்றாள் அவள். அவள் தொண்டை அடைத்துக்கொண்டது.

'அடி என் கண்ணு! என் இப்படிப் பார்க்கிறே? இதோ டாக்டர் ஐயா வந்துவிடுவார் என்று தேற்றினான்.

'மச்சான்! உனக்குப் பைத்தியம். நான் பிழைக்கப் போகிறதில்லை. என்னைப் பிழைக்க வைக்க இந்த உலகத்தில் இனி மருந்தில்லை' என்றாள் மிகச் சாந்தமாக!

'செல்லாயி.......! அப்படிச் சொல்லாதே! என்னை விட்டு விட்டு நீ எங்கே போகிறாய்?' என்று அழாத குறையாகப் பேசினான்.

'இந்தா! இதோ பாரு! இந்த 'சிப்பி' யிலிருந்து பிறந்த 'முத்து'. வயது ஒன்றுகூட ஆகவில்லை. பார்த்துக் கொள்....' என்றாள். அவள் நிதானமாகப் பேச வேண்

டும் என்றுதான் ஆசைப்பட்டிருக்கவேண்டும். ஆனல் அவளால் பேச முடியவில்லை.

'ஆயி! இப்படிப் பேசாதே. என்னல் இதைச்சகிக்க முடியவில்லை' என்ருன்.

'மச்சான்! கொஞ்சம் நிதானமாகக் கேள்! என் கதை உனக்கு இதுவரை தெரியாமலே இருந்துவிட்டது ஆம்! வேண்டுமென்றே மறைத்து வைக்கப்பட்டது. இதைச் சொல்லாமல் செத்து விடலாம் என்று நினைத்தால் இந்தப் பாழாய்போன மனது கேட்கமாட்டேன் என்கிறது. சொல்லி விடுகிறேன். இடை இடையே தடுத்து விடாமல் கொஞ்சம் பொறுமையாகக் கேள்!' என்று 'முஸ்தீபு' செய்தாள்.

குப்பன் பெரிய பார வண்டிகளை யெல்லாம் இழுத்துப் பழக்கப்பட்டவன். ஆனல், செல்லாயி கூறும் ஒரு வார்த்தையைக் கூட அவன் மனம் சுமக்க முடியவில்லை. அவனுக்கு உலகமே சுற்றுவதாக ஒரு உணர்ச்சி! •

செல்லாயி ஜுர வேகத்தில் பேசுகிருள் என்று அவன் நம்பினன். ஆனல், அவள்........'

'கட்டிய கணவனிடமே இந்த நாறிப்போன சேதியைச் சொல்ல வேண்டி வந்ததே! மச்சான்....! ஆத்திரப் படாதே! இதைக்கேள்!' என்ருள் மறுபடியும்.

குப்பன் அந்தக் கயிற்றுக் கட்டிலில் அவள் காலடிப் பக்கத்தில் உட்கார்ந்தான். அவள் ஒன்றும் பேசவே இல்லை.

* * *

'என் கதை ஒரு 'குப்பைத் தொட்டி'—எல்லாம் அழுகிய பண்டங்கள்! அதை என் மனதிலேயே வைத்து வைத்துப் 'பூசணம்' பூத்து விட்டது.

மச்சான்! நான் இளம் வயதில் துள்ளி விளையாடும் பசுங்கன்று. பயம் அறியாதவள். ஒரு குடும்பத்திற்கு ஒரு பெண். செல்லக் குழந்தை! கேட்கவேண்டுமா—

எங்கு வேண்டுமானாலும் திரிவேன். இச்சைபோலத் திரியும் மைனா — என்றுதான் என் நினைப்பு. 'என்ன தான் இருந்தாலும் இப்படி விடலாமா? அவளுக்கும் வயது ஆகிக்கொண்டே வருகிறது. கால், கை அடங்கி யிருக்கவேண்டாமோ?' என்பார்கள் கிராமத்தார். ஆனால் என் அப்பாவின் எதிரில் இதைச் சொல்ல முடியுமா—? இயற்கையாக முரட்டு 'சுபாவ' முள்ளவர். பணக்காரர். கல் வீட்டுக்காரர். எப்பொழுதாவது சமயம் நேர்ந்தால்.... 'அதுக்கு வயது வந்தால் தானே அடங்கிவிடும்' என்பார் அப்பா. 'நெருப்புக்கு அருகே ஈ வந்து என்ன செய்யும்' என்பாள் தாய்.

கிராமத்தில் என்னை எங்குவேண்டுமானாலும் பார்க்க லாம். தோட்டம், குளம், வயல், வெளி....நான் உண்மை 'பறவை' யாகவே வாழ்ந்தேன். அந்த ஊர் இளம் பிள்ளை களுக்கு என்மேல் ஒரு கண். எப்பொழுதும் பின்னாலேயே திரிவார்கள். ஆனால் அவர்களுக்கு உள்ளுக்குள் பயம். நான் எந்தப் பயலையும் விடுகிற பழக்கமில்லை. முகத்தில் அடித்த மாதிரி எதிரிலேயே பேசி விடுவேன். ஆகவே, என்னை நினைத்தாலே தொடை நடுக்கந்தான்!

என் வாழ்க்கையிலே 'அவன்' குறுக்கிட்டது. அந்த மாரியம்மன் கோவில் செடல் உற்சவத்தின் போதுதான்! சந்தானம் பார்வையில் நான்பட்டேன். எனக்கும் பார்வை பழுதில்லையே!

மற்ற காலிப் பயல்கள் போல் அல்ல அவன். அந்தக் கூட்டத்துடன் அவன் சேருவதில்லை. எனக்கு இரண்டு

'நிழல்கள்' ஒன்று இயற்கையான எனது நிழல். பிறி தொன்று சந்தானம்!

நான் வயற் பக்கம் போனல் பல் குச்சியைத் தீட்டிக் கொண்டே வருவான். வாய்க்காலில் தண்ணீர்கொண்டு வரச்சென்றால், அங்கே அவன் குளித்துக்கொண்டிருப் பான். மாரியம்மன் கோவிலுக்குப் போனல் அம்மன் பூஜை செய்ய அந்த 'ஆசாமி' வராமல் இருப்பதில்லை. அவனைப் பார்க்கும் பொழுதெல்லாம் எனக்கு என்னமோ மனதில் ஒரு 'அரிப்பு' எற்பட்டது.

* * *

செல்லாயி இப்படி என்றைக்கும் பேசியதில்லையே என்று பார்க்கிருயா—? ஆமாம்! இதுதான் எனது முதல் பேச்சு. ஆனல், கடைசியும் இதுதான்! மச்சான்! நீ உண்மையில் ஒரு தெய்வந்தான்.......!

நான் ஒரு நாள் மாந்தோப்பில் செத்தை பொறுக்கிக் கொண்டிருந்தேன். அவன் எங்கிருந்துதான் வந்தானே—? அருகில் வந்தான். 'இந்தா, பிள்ளே! வெத்திலே சருகு இருந்தா கொடேன்' என்ருன். 'பாக்கில்லையே' என் றேன். 'பரவாயில்லே' என்ருன். நான் நீட்டினேன். என் கரம் அவன் கரத்தின்மீது பட்டது. அப்பா, அவன் கண்களில் தீப்பொறி பட்டமாதிரி ஒரு காட்சி! என் உடம்பெங்கும் ஒரு 'நீரோட்டம்'!

எங்கள் நட்பு வளர்ந்தது.

அவன் 'மிலிடரி'க்குப் போய்விட்டு வந்தவனும். அங்கு நடந்தவைகளைக் கதை கதையாகச் சொல்வான். அடிக்கடி என் கரங்களைப் பிடித்துக்கொண்டே பேசுவான்.

மச்சான்! எனக்கு இருதயம் வெடித்துவிடும் போலிருக்கிறது. இந்தக் 'குணங் கெட்ட சேதி'யை

எப்படி உன்னிடம் சொல்வது—? எந்தக் கழுத்து உனக்குத் தாலி கட்ட வணங்கிக் கொடுத்ததோ அது உனக்குத் 'துரோகம்' செய்தது.

மச்சான்! நான் ஏதோ பெரிய படிப்பாளி மாதிரி பேசுகிறேன் என்று நினைக்காதே. இதற்குப் படிப்பு வேண்டாம்.

சாதாரண அறிவிருந்தால் போதும். அறிவு, எட்டாத பொருளல்ல. ஒவ்வொரு வீட்டுக் குப்பை கூளங்களிலும் கிடக்கும்.

பாடம் படித்துப் பட்டம் பெற வேண்டாம், பகுத்தறிவுக்குப் பழக்கம் போதும். அனுபவத்திலே கிடைப்பது தான் அறிவு. அதைக்கொண்டு தான் நான் பேசுகிறேன்.

ஒரு நாள் மாலை ஆறு மணி இருக்கும். அப்பா வயற்காட்டிலிருந்து வரவில்லை. 'வருவார், வருவார்' என்று வழியிலே நின்று காத்துக் கிடந்தேன். சந்தானந்தான் வந்தான். எதைச் சொல்வது...? அன்று அந்த மாமரத்தடி 'பள்ளியறை யாகும் என்று நான்நினைக்கவும் இல்லை.

கல்லின் மீது பட்ட பந்து மீண்டும் மீண்டும் அதன் மீது பட்டுப் பட்டுத் துள்ளி விளையாடுவதைக் கண்டு சிறுவர்கள் சிரிக்கிறார்கள்.

விளக்கில் பட்டுப் பட்டு எட்டியோடாத வெட்டுக்கிளியுந்தான் வேடிக்கையாகத் தோன்றுகிறது சிறுவர்களுக்கு.

சந்தானத்துடன் விளையாடுவதைக் கண்டு என் மனமும் அப்படித்தான்........

* * *

யாதம் மாறிக் கொண்டே வந்தது. ஒரு நாள் சாப்பிட்டுக் கொண்டே இருந்த நான் திடு திடுவென்று வெளி

யிற் சென்று வாந்தி எடுத்தேன். நான் குமட்டும் குரலைக் கேட்டு அன்னை வந்தாள். 'என்னடி அது! சோற்றிலே மயிர் ஏதாவது இருந்ததா-? மசக்கக்காரிமாதிரி இப்படி....?' என்றதும் யாரோ என் மண்டையில் அடித்தார்கள்—ஆயிரம் சம்மட்டிகளால் அடித்தது போன்ற பிரமை!

சந்தானத்திற்குக் காதலியாக இருக்க ஆசை இருந்தது. ஆனால் 'சந்தான பாக்கியம்' பெறும் தாயாகப்பயம்!

எங்கள் வாழ்க்கைப் போக்கைச் சித்தரிக்கும் 'சித்திரம்' தீட்டத் தொடங்கி மூன்று மாதங்களாகி விட்டன.

நான் சந்தானத்தைத் தேடினேன். ஒளிய ஆரம்பித்தான். 'என்னைப் பார்க்காமலேயே இருக்க முடியவில்லை' என்று எத்தனையோ முறை சொல்லியிருக்கிறான். ஆனால், இப்போது....? தேடியும் கிடைப்பதில்லை. கிடைத்தாலும் இரண்டொரு வார்த்தைகளுடன் நழுவி ஓட ஆரம்பித்தான் அழுது சொல்லிப் பார்த்தேன். அசையவில்லை. அணைத்துக்கேட்டேன். அதுவும் அவன் காமப் 'பசி'க்கு நான் அளிக்கும் 'விருந்து' என்று எண்ணிக் கொண்டான்.

இனி என் கதி.... ?

அப்பா அடுத்த ஊருக்குப் போய் விட்டார். அன்னை மட்டும் வீட்டில் இருந்தாள். நான் நினைத்தேன். எப்படியும் உண்மையைச் சொல்லிவிட வேண்டும் என்று முடிவு கட்டினேன். எப்படிச் சொல்வது—? அம்மா முகத்தை யார் பார்ப்பது?

அம்மா அடுப்பங்கரையில் வேலையாய் இருந்தாள். நான் சொல்லி விட வேண்டும் என்று அடுப்பங்கரை வரை சென்றும் தைரியம் வரவில்லை. இருதயம் பறவைகளின் சிறகு போல அடித்துக்கொண்டது கடைசியாக........?

'ஐயோ! கல்லைத் தூக்கிப் போட்டு விட்டாயே. ஊரில் சொன்னதை நீ நடத்திக் காட்டி விட்டாயே. இதோடு என் குடும்பம் தொலைந்தது'—என்று கதறினாள். இருவரும் சேர்ந்து அழுதோம். இருட்டி விட்டது என்பது கூடத் தெரியவில்லை.

திடுக்கிட்டு விழித்துக் கொண்டேன். அம்மா தாழ்வாரத்தில் தூங்குவதைக் கண்டேன். 'நம்மால் இவர்களுக்கு ஏன் இந்தத் தொல்லை?' என்று நினைத்தேன். தோட்டத்துக் கிணறு—'வா, வா, வந்து விடு' என்று கூப்பிட்டது.

'தொப்' என்றொரு ஒலி, அதை அடுத்து 'திடுதிப்' என்று ஒரு சப்தம்!

சந்தானத்தின் மடியில் நான் படுத்திருந்தேன். அவன் எப்படி வந்தான்—?

*　　*　　*

'கண்ணே! உன்னைத் தேடித்தான் ஓடி வந்தேன். என்னை மன்னித்து விடு' என்றான்.

எனக்கு ஆச்சர்யம்! 'நீ எப்படி வந்தாய்—? என்றேன்.

'அது பற்றி இப்பொழுது என்ன—? உடனே என்னுடன் கிளம்பு! எங்காவது போய்ப் பிழைத்துக் கொள்வோம்' என்றான்.

இப்படி ஏதேதோ—

கடைசியில் இரவு பன்னிரண்டு மணிக்குச் சாவடிக்கு அருகில் உள்ள சத்திரத்தில் சந்திக்க முடிவு செய்தோம். அவன் பிரிந்தான்.

சென்னையில் குடித்தனம்—

பிரசவ ஆஸ்பத்திரியில் இன்னமும் என் பெயர் இருக்கும். செல்லாயி குழந்தையை விட்டு விட்டு இரவிலே ஓடி விட்டாள் என்று குறித்திருப்பார்கள்.

எதற்காக—? சந்தானம் கைது செய்யப்பட்டான்.

காரணம்—? எங்களூர் மாரியம்மன் கோவில் நகைகளைத் திருடியதற்காக! இப்பொழுது புரிந்து விட்டது எனக்கு. போலீசுக்குப் பயந்து கொண்டு எங்கள் தோட்டத்தில் ஒளிந்து கொண்டிருக்கிறான். அப்பொழுது நான் கிணற்றில் விழுந்தேன் சமயத்தைப் பயன் படுத்திக்கொண்டான்.

கெட்டுப் பட்டினம் போனேன். கேடுகெட்டுச் சிதம்பரம் வந்தேன். டாக்டர் ராவ் வீட்டு வேலைக்காரியானேன். அங்கு தான் என் தாயைக் கண்டேன்.

விராட்டித் தட்டிப் பிழைத்தாள். கண்ணிழந்திருந்தார் தகப்பனார். இருவரின் யோசனையில்—என் வறண்ட வாழ்வில் மச்சான்! ஆசை அத்தானாகிய நீ முளைத்தாய். ஏதோ இதுவரை ஓடிற்று. இனியாவது ஒரு ஒழுங்குடனிருக்க வேண்டும் என்று பார்த்தேன்.

நேற்றுக் காவலுக்குப் படுத்திருந்த என்னை அந்த வெங்கிட்ட ராவ், காமத்திற்குப் பலியிட்டான்.

அணைத்தான். அவன் ஆவல் அடங்கிற்று. ஆனால் என் வாழ்வில் மீண்டும் 'நச்சாறு—!'

செல்லாயி தட்டுத் தடுமாறி இதுவரை பேசிவிட்டாள். இனி அவளால் பேச முடியாது என்று அவளுடைய பரிதாபமான கண்கள் 'மனு'ச் செய்து கொண்டன.

'அந்தத் 'தடித்தனம் பிடித்த' மிருகத்திடம் தான் காலில் விழுந்து கெஞ்சினேன். வருகிறேன் போ என்ருன். அவன் தலையை வெட்டித் தாளில் வைக்கிறேன் செல்லாயி.......!' என்று பட படக்கப் பேசினன் குப்பன்.

மச்சான்! அவன் மட்டுமல்ல குற்றவாளி. ஆண்களின் உள்ளத்தில் விலங்கு மேய்கிறது. அதுவும் பன்றி! மலத்தைத்தின்று வயிறு வளர்க்கப் பார்க்கிறது. ஆண்களிடம் உலவும் இந்தத் 'தடித்தனம்' சாகிற வரையில் பெண்களுக்கு உயர்வு இல்லை......

புந்தத்தைக் கொளுத்திக் காட்டிக் கொண்டே 'தேனீயே! ஓடாதே. தேனைக் காத்துக் கொண்டிரு' என்று கூறுவது போலல்லவா இருக்கிறது.......

கற்பு—ஆண்களின் 'மிருக புத்தி' யிடம் எப்படித் தப்ப முடியும்?' என்று பேசினுள்.

'என்னை மன்னித்து விடு. மானங்கெட்டவள் என்று நினைக்காதே. மனிதத்தன்மையோடு உண்மையை ஒப்புக் கொண்ட ஒரு உயிர் என்று மதி! இனி நான் வாழ முடியாது. நான் குவளைக்காயை அரைத்துத் தயிரில் குழப்பிக் குடித்துவிட்டேன். எண்ணெய் வேறு தேய்த்து முழுகி விட்டேன். ஆமாம்! மச்சான்! நஞ்சையும் குடித்து

விட்டேன். இனி எழ மாட்டேன்'—என்று அவளது வாழ்க்கையின் 'இறுதி அத்தியாயத்தை' முடித்தாள்.

செல்லாயி தாகம் எழுகிறதென்று கையைக் காட்டினுள். பக்கத்திலிருந்து நீரை எடுத்து அவள் வாயில் ஊற்றினுன். அவள் கண்கள் சுழன்றன. அவள்—?

'செல்லாயி! செல்லாயி!.......

பதிலுக்கு ஒரு மிரண்ட பார்வை, கடைசிப்பார்வை!

'ஐயோ! செல்லாயி..!' குப்பன் கதறல்.

'வீர், வீர்'—இரைச்சலில் விழித்துக்கொண்ட குழந்தை.

ஆனல், செல்லாயி—???

---

# கருங்குழி பார்சல்

“இது என்ன வாடை?” என்றார் சங்கரம் பிள்ளை—கருங்குழி ‘ஸ்டேஷனில்’ உள்ள ‘பார்சல் கிளார்க்.’

“ஆமாங்க, பிண நாற்றமடிக்குது, இந்த ‘பார்சல்’ சந்தேகமாக இருக்கு துங்க” என்று அந்த வயதான ‘வழுக்கை மண்டை’ — ‘போர்ட்டர்’ வேலாயுதம் — தன் (நாய் மோப்பத்தை) அவிழ்த்துவைத்தான்!

‘N. L.’ இது என்னடா விலாசம்? வந்து வாரம் ஒன்று ஆகிறது! ஆளுமில்லை, நாளுமாகிறது. டே, வேலா, ‘ஸ்டேஷன் மாஸ்டரை’க் கூட்டிவா, உடைத்துப்பார்ப்போம்” என்றார் பிள்ளைவாள் மீண்டும் மூக்குக்கண்ணாடியைத் துடைத்துக்கொண்டே!

‘ஸ்டேஷன் மாஸ்டர்’ தாமோதரம் வந்தார். எல்லா ‘கிளார்க்கு’ களும் கூடிவிட்டனர்.

‘போர்ட்டர்கள்’ குசுகுசுவென்று பேசிக்கொண்டனர்.

வேலாயுதம் ‘பார்சலை’ உடைத்தான். பிணவாடையின் எடை அதிகரித்தது! வைக்கோலைப் பிரித்தெடுத்தான்—கருப்பு சீலை தெரிந்தது! ஐயோ, ஒரு பெண்ணின் பிணம்—உப்பி, ஊதி, வெளுத்திருந்தது! சுற்றியிருந்தவர்கள் விழிகளில் மிரட்சி வழிந்தது.

அந்த மரப் பெட்டிக்குள்ளே நிர்வாணமாக ஒரு ‘அழகுப் பேதை’ அடக்கஞ்செய்யப்பட்டிருந்தனள். பொன்னை உருக்கியடித்திருக்க வேண்டும். ஆம், அவள் ‘தங்கச்சிலை’தான், சந்தேகமில்லை. ஆனல்? அவளின் கன்னங்களிலும் மார்பிலும் காயம் உதடுகளில் புண்—

ஆகவே வீக்கம்! அப்புறம்................வேலாயுதம் சீலையை இழுத்துப் பிணத்தை மூடிவிட்டான்!

* * *

எழும்பூர் 'ஸ்டேஷனி'ல் ரிஸீவரை' சட்டென்று கீழேவைத்துவிட்டு 'பார்ஸல் கிளார்க்கி'டம் ஓடினர் 'ஸ்டேஷன் மாஸ்டர்' மனேகர். எட்டைப் புரட்டினர். அவர் கண்களின் பசி தீர்ந்து விட்டதுபோல "அடே, ஏகாம்பரம், ஓடு, விரைவிலே ஓடு, ஓடிப்போய் 'இண்டர் நேஷனல் பாங் மானேஜிங் டைரக்டர்' 'மிஸ்டர் ஒயிட் துரை இருக்கிறரா, விசாரித்துக்கொண்டுவாடா' என்று மூச்சைப் பிடித்துக்கொண்டு பொறித்துத் தள்ளினர் வார்த்கைதளை.

விரைக்க விரைக்க ஓடிவந்து நின்முன் ஏகாம்பரம். அவன் 'நாய் சுவாசம்' நடத்திக்கொண்டிருந்தான். 'ஸ்டேஷன் மாஸ்டர்' சிலைபோலிருந்தார். பக்கத்தில் 'பார்ஸல் கிளார்க்' பரமசிவம் பயமே உருவமாக நின்று கொண்டிருந்தார்.

"என்னடா விசாரித்தாயா?"

"கப்பலேறி விட்டாராம்"

"ஏண்டா?"

"அக்கரை சீமையிலேதான் அவர் ஊராம். அங்கே போய்ட்டாருங்களாம்"

"திரும்ப எப்போ வருவாராம்?"

"அது அவருக்குத்தான் தெரியும்"

"ஆபீஸில் கேட்டாயா?"

"அவர் வேலையை ராஜிஞமா கொடுத்துட்டு கிளம்பிட்டாருங்களாம்"

மனேஜர் சற்றுநேரம் யோசித்தார். பரமசிவத்தை பார்த்தார். அவர் இவரைப் பார்த்தார். இரண்டுபேரையும் ஏகாம்பரம் வெறிக்க வெறிக்க நோக்கினன்.

“சரி, ‘போலிஸு’க்குத் தகவல் கொடுத்துவிடுவோம்.”

மனேஜர் தன் அறைக்குள் நுழைந்தார். பரமசிவம் அவரைத் தொடர்ந்தார்.

* *

‘இண்டர்நேஷனல் பாங்’ வாயிற்படியில் ‘போலிஸ்’ கார் வந்து நின்றது. திபு திபுவென்று ‘போலிஸ் கமிஷனர்’ சண்முகம் எல்லோருக்கும் முன்னல் உள்ளே வந்தார். வழியில் நின்று கொண்டிருந்தான் ‘ஆபீஸ்பியூன்’ அங்கப்பன்.

“அடேய், துரை எங்கேடா?”

“லண்டன் போயிட்டாருங்க”

“ஏன்?”

“வேலே வேணுமின்னுட்டாருங்க”

“ஹெட் கிளார்க் யாருடா?”

“ரங்கராமானுஜ அய்யங்கார்”

“எங்கே அவர்”

“சிந்தாதரிப்பேட்டையிலே வீடுங்க. மூணு நாளாய் பிரமை பிடிச்சவர்மாதிரி யிருக்காருங்க—துரை ஊருக்குப் போர முதல்நாள் அவரை டிஸ்மிஸ் செய்திட்டாருங்க.”

“வந்த போலீஸ் புலிகள்” மீண்டும் திரும்பினர். கார் சிந்தாதிரிப்பேட்டையை நோக்கிப் பறந்தது!

* * *

“மிஸ்டர் அய்யங்கார்—இது யார் படம்?”

“ஐயோ போலீஸ்!”

“முதலில் இதைச் சொல்லும்”

“இது என்னுடைய மனைவியின் படம்”

“அவள் எங்கே?”

“? ? ? .... .... !”

தன் அறையில் உட்கார்ந்திருந்தார் ரங்கராமானுஜம். அவர் முகம் விகாரமாக இருந்தது. தலைமயிர் அலைந்து கிடந்தது. எதிரில் ஒரு பெண்படம் மாட்டியிருந்தது. அதைப்பார்த்து மிரள மிரள விழித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது ‘போலீஸ் கமிஷனர் உள்ளே நுழைந்தார். தன் பையிலிருந்த படத்தை எடுத்துக் காட்டிக்கேட்டார். அய்யங்கார் விழித்தார். சுவற்றில் மாட்டியிருந்த படமும், கையிலிருந்த படமும் ஒன்றுக இருந்தது.

“இது யார்?—மீண்டும் கமிஷனரின் மிரட்டுக்குரல்”

“என் மனைவியுடையது”—பரிதாபங் கலந்த பதில்.

“அவள் எங்கே?”—அழுத்தமான கேள்வி

மிரண்ட பார்வையும், வரண்ட தொண்டையிலிருந்து விம்மலும், உலர்ந்த உதடுகளில் சிறு நடுக்கமும், ‘கடைசியில் இரண்டு சொட்டு கண்ணீரும் தான் விடை! வேறு என்ன வெளிவரமுடியும்?

“கருங்குழி பார்சலின் கதையைச் சொல்லும்”

“.....................”

“காலம் கடத்துவதால் காணும் பலன்?

“ஸார், சொல்லிவிடுகிறேன். சுருக்கமாக! எனக்குப் பதவியிலே உயர ஆசை, அளவு கடந்த ஆசை, சாதாரண கிளார்க்கிலிருந்து ‘தலைமை கிளார்க்காக’ப் பார்த்தேன். எனக்குக் கீழிருந்தவர்கள் உயர்ந்தனர். நான் மட்டும் ‘பழைய குருடி’ யாகவே இருந்தேன். எங்கள் துரையோ வயதில் குறைந்தவன். ‘வீனஸ் விளையாடல்களில்’ வெகு பிரியம். கூத்தும் குடியும் உண்டு. பலநாள்

இதனைக் கண்டேன். பளிச்சென்று ஒரு யோசனை பட்டது என் கண்ணின்முன் துரையுடன் ஆடும் 'ஆப்பைக்காரக் குட்டியும்' என் வத்சலாவும் சேர்ந்து பட்டனர். வத்சலா விரிக்கும் வலையில்தான் என் நிலையின் உயர்வு என்று எண்ணினேன். அழைத்தேன் மறுத்தாள். நாடகங் காண வாடி என்றேன். வந்தாள். அவளை துரைக்கு தத்தம் செய்தேன்! அப்பொழுதே அதிகார பூர்வமாக வேலையை உயர்த்தி ஆர்டரையும் தந்தான். வந்து விட்டேன். அவ்வளவுதான். மூன்றும் நாள் வேலை போயிற்று என்று வந்த கடிதம் சொல்லிவிட்டது''

"மானங்கெட்டவனின் மகாத்மியம்தான் உம் கதை"

"அய்யங்கார் கையில் அந்த 'அழகிய' வெள்ளிக் காப்புகள் ஏறின. அரசாங்க விருந்தினராக போலிஸார் அவரை அழைத்துச் சென்றார்.

மீதிக் கதையைப் பேசவேண்டியவர் துரை—லண்டன் சென்று விட்டார். இல்லாவிட்டால் வத்ஸலா— அவள் 'கருங்குழி பார்சல்' ஆகிவிட்டாள்!

"அன்று, என்று மில்லாத வழக்கமாக என்னை அழைத்தார் 'எதற்கு?' என்றேன். 'நல்ல நாடகமடி' இன்று— 'மானங்கெட்டவன்' என்பது நாடகத்தின் நாமம்' என்றார். 'சரி' என்றேன். 'அலங்கார வகைகளில் அணுவும் குறைக்காதே, பார்த்தால் பறித்து தின்னவேண்டும் என்று ஆசைபிறக்கிற அளவு மேனியை மினுக்கிக் கொள்ளடி. 'அப்ஸரஸ'ும், தோற்றுப்போக வேண்டும்' என்று அடுக்கினார். கிண்டல் என்று எண்ணினேன். வீட்டை விட்டு கிளம்பினோம். 'அடடா', என்று துடித்தார். 'ஏன்?', என்றேன். 'இன்று மாலை துரை வரச்

சொன்னார்,' என்றார். 'அப்படியானால் நான் வீட்டிற்குப் போகிறேன். நீங்கள் ஆபீஸரைப் பாருங்களேன்' என்றேன். 'புறப்பட்டுத் திரும்புவதா. வழியிலேதான் துரை வீடு. பார்த்துவிட்டு நாடகம் பார்க்க நடந்துவிடலாம்' என்றார். துரை வீட்டு வாசலை யடைந்ததும் நான் தயங்கினேன். 'என்னடி!' என்றார். 'நான் வெளியில் இருக்கிறேன். போய் நொடியில் திரும்பிவிடுங்கள்' என்றேன். 'போடி பைத்தியம்! எங்கள் துரை புலியா, சிங்கமா நீயும் வாயேன். அதுவும் அவர் வெள்ளைக்காரர். நம்ம ஆள்கள் மாதிரி வெறிக்கப் பார்க்கிற விகாரபுத்தி கிடையாதடி' என்றார். மனமில்லாமல் சென்றேன். துரை எங்களை வரவேற்றார்.

ஏதோ எழுதினார். நீட்டினார் துரை. அவர் பெற்றுக்கொண்டு வெளியில் செல்ல எழுந்தார். நான் தொடர்ந்தேன். 'இங்கேயே இரு வந்துவிடுகிறேன், என்றார். அப்பொழுதுதான் சந்தேகம் தொடங்கிற்று. பயம் படர்ந்தது. அமர்ந்தேன். மணி ஆக ஆக துரையின் முகத்தில் ஒருவகையான உணர்ச்சி படர்ந்தது. "என்னை விரும்புகிறாயா?" என்று சட்டென்று வார்த்தைகள் தெறித்தன. நிலைமை இப்பொழுது நன்றாக விளங்கிவிட்டது! யோசித்தேன். என் கணவன் என் கண்முன் ஒரு நரிபோலவே தென்பட்டான். மானங்கெட்ட மாடு மாதிரி புலப்பட்டான்!

"துரையே, உன் விருப்பப்படி நடக்கிறேன். ஆனல்....?"

"என்ன?"

முதலில் அந்த மானங்கெட்டவனை வேலையை விட்டு நீக்கவேண்டும்...."

" அப்புறம் "

" என்னை எப்பொழுதும் உன்னோடு வைத்துக் கொள்ளவேண்டும்!"

" ஆகட்டும் "

பிறகு தொடங்கிவிட்டான் 'இருட்டறைக் கலை'யை! தொட்டான் துவண்டேன். விட்டானா? நான்தான் விலகினேனா?—மூன்று பகல் ஆமாம், பட்டப்பகல்! யார் இதை அட்டிசெய்வது? மூன்று இரவுகள், விழித்த விழி மூடாமல் விளையாட்டுகள் விதவிதமாய், மணிக்கு மணி மாறி மாறி.......!

கடைசி இரவு, கோப்பையிலே கொட்டினான் அந்த குங்கும நிற குழம்பை— 'ஒயினாம்' அதன் பேர்! குடியென்று, மடியிலே இழுத்துப்போட்டு ஊற்றினான். குடித்தேன். எஞ்சிய எச்சிலை அவன் உறிஞ்சினான். 'பாட்டில்கள்' பல காலியாயின. ஆட்டம் தொடங்கிவிட்டது! ஐயோ கன்னங்களிலும், உதடுகளிலும் சிறு சிறு 'எறும்புக்கடிப்பு'...பிறகு திடீரென்று ஒருவலி—உயிர்போவது போல! ஐயோ என்று அலறினேன்; அவ்வளவுதான் "

இதுதான் தொடர்ந்து சொல்லவேண்டிய 'சொச்சக் கதை' அப்புறம் அழகு வத்சலா 'கருங்குழி பார்சலானாள்' —அழகிய பிணம் பேசியிருந்தால் இதைத்தான் சொல்லும்! மிகுதியை சிந்தித்து முடித்துக்கொள்வார்கள், வாசகர்கள்-ஐயோ 'கருங்குழி பார்சல்'—மானங்கெட்ட சமுதாயத்தின் ஒரு அணுவிட்ட விஷ மூச்சு!

---

PRINTED AT THE SRI NATARAJA PRESS, TURAIYUR.

# தில்லை - வில்லாளன்

## தீட்டியவை :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சாவோலை (இரண்டாம் பதிப்பு) .... | விலை ரூ. | 0 | 8 | 0 |
| முதல் விசாரணை (சிறந்த ஆராய்ச்சி நூல்) | ,, | 1 | 4 | 0 |
| அதிகார போதை .... .... | ,, | 0 | 6 | 0 |
| கடைசி நாள் .... .... | ,, | 0 | 5 | 0 |
| கதம்பம் .... .... | ,, | 0 | 8 | 0 |
| காலேஜ் காதல் .... .... | ,, | 0 | 3 | 0 |

## அடுத்து வெளிவருபவை :

அத்திப்பூக்கள் .... .... விலை ?

காமக்குளம் .... .... விலை ?